පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

48 T

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

දෙමළ සාහිත්‍ය රසාස්වාදය
தமிழ் இலக்கிய நயம்
Appreciation of Tamil Literary Texts

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

* பகுதி **I** இல் **1, 2** ஆகிய **இரு** வினாக்களுக்கும் பகுதி **II** இல் **3**ஆம் வினாவுக்கும் பகுதி **III** இல் **4, 5, 6, 7** ஆகிய வினாக்களுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கும் (எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு) விடை தருக.

## பகுதி I

**1.** (i) தொடக்கம் (x) வரையுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) "இல்லை மஹத்மயா, சற்று முன்னம்தான் கேட்டேன்; சிசுவின் இருதய ஒலி ஒழுங்காக இருக்கிறது."
- இக்கூற்று யாரால், யாருக்குக் கூறப்பட்டது ?

(ii) "நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ."
- இங்கு அவல், மிசை என்பவற்றின் பொருள் யாது ?

(iii) "கற்பக தருவும் நாணும் கையினாய் கன்னா."
- இக்கூற்றின் மூலம் உணர்த்தப்படுவது யாது ?

(iv) "நாயகன் இவன்கொல் என்று அயிர்த்து, நாட்டம் ஓர் ஆயிரம் இல்லை என்று ஐயம் நீங்கினார்."
- நாட்டம் ஓர் ஆயிரம் உடையவன் யார் ?

(v) 'பிண்ணாக்கும் உண்டாம்' என்ற தொடர் எவ்வாறு பாம்புக்கும் எள்ளுக்கும் பொருந்துகிறது ?

(vi) 'மதியை மதித்தவன் வானத்தில் ஏறி மதியை மிதித்து வந்தான்.'
- இத்தொடரை விளக்குக.

(vii) 'நாவலர் இருவர்' கட்டுரையில் ஒப்பிடப்படும் **இருவரும்** யாவர் ?

(viii) 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' என்று கூறும் வள்ளுவர் 'தீயொழுக்கம்' எதனைத் தரும் என்கிறார் ?

(ix) 'ஊரோடு வானும் உருகி அழுதரற்றும்
மார்கழி மாத மழை'
- இங்கு பயின்றுள்ள அணி யாது ?

(x) "மஞ்ச ளாவிய மாடங்க டோறும்
மயில்கள் போன்மட வார்கணஞ் சூழும்."
- இங்கு மேகம், கூட்டம் என்னும் பொருள்களைத் தரும் சொற்கள் யாவை ?

(2 × 10 = 20 புள்ளிகள்)

**2.** பின்வரும் செய்யுள்களினதும் உரைப்பகுதிகளினதும் பொருளை உமது மொழிநடையில் எழுதி, தடித்த எழுத்துகளிலுள்ள தொடர்களின் சிறப்புகளை விளக்குக.

(i) நனைவரு கற்பக நாட்டு நல் நகர்
வனை தொழில் **மதிமிகு மயற்கும் சிந்தையால்**
**நினையவும் அரியது**, விசும்பின் நீண்டது, ஓர்
புனை மணி மண்டபம் பொலிய எய்தினான்.

[பக். 2 ஐப் பார்க்க

(ii) பொழிலிடை வண்டின் ஒலியும், ஓடைப்
புனலிடை வாய்க்கும் கலியும்,
குழலிடை வாய்க்கும் இசையும், வீணை
கொட்டிடும் அமுதப் பண்ணும்,
குழவிகள் மழலைப் பேச்சும், பெண்கள்
கொஞ்சிடும் இதழின் வாய்ப்பும்,
விழைகுவ னேனும், **தமிழும், நானும்
மெய்யாய் உடலுயிர் கண்டீர்!**

(iii) வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி!
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்!
**கற்பகம் அடைந்ததுன் கரங்கள்!**
தேனுறு மலராள் அரியிடம் புகுந்தாள்
செந்தழல் அடைந்ததுன் தேகம்
யானும் என் கலியும் எவ்விடம் புகுவோம் ?
நந்தியே நந்தயா பரனே!

(iv) காட்டிலே கழுகின் வேந்தன் ஆற்றிய கடமையையும் நாட்டிலே கங்கை வேடன் ஆற்றிய நன்மையையும் அறிவோமாயின், வானர வீரனது சொல்லின் பொருள் இனிது விளங்கும். கானத்தில் செல்லும் பொழுது ஆதரவற்று, அரற்றிய மங்கையின் அழுகுரல் கேட்டுக் கழுகின் காவலன் காற்றினுங் கடுகி வந்தான்; அறநெறி தவறிய அரக்கனுடன் நெடும் பொழுது ஆதரவற்ற சீதைக்காக அறப் போர் புரிந்து ஆவி நீத்த கழுகின் வேந்தன், 'தெய்வமரணம்' எய்தினான் என்று இராமன் போற்றிப் புகழ்ந்தான். "தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு" என்று சொல்லின் செல்வனாய அனுமன் புகழ்ந்துரைத்தான். அரன் அளித்த வாளுடையானை வெறும் அலகுடையான் வெல்லுதல் இயலாதென்றறிந்தும் அறநெறி திறம்பிய அரக்கனோடு பொருது ஆவி துறத்தலே தன் கடமை என்றறிந்து **கழுகின் வேந்தன் உயிர்கொடுத்துப் புகழ் கொண்டான்.** இவ்வாறு இராமனது சேவையில் அமர் புரிந்து இறக்கவும் ஒருப்படாத தனது குறையை நினைந்து வானர வீரன் வருந்தினான்.

(v) சித்திர வனப்பு வாய்ந்த அச்செம்மல், பிராட்டியாலிடப்பட்ட முத்தணி நிரைத்த பீடத்தில் அமர்கின்றனர். அவ்வேளை **பெருமானாரின் பேரொளி பரப்பிப் பொங்கிப் பெருகிய அழகு வெள்ளத்தில் பிராட்டியின் கூருடைக் கரியவாட் கண்களாகிய கயல்கள் நீந்திக் குளிக்கின்றன.** அப்பொழுது நங்கை நல்லாள் 'மனமெனு மத்தயானையின் நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து' போகாதவாறு தம்மைத் தாமே காக்கின்றார். நாணெனும் போர்வை போர்த்துக் கற்பெனும் வேலிகோலித் தமது அவாவினைக் காத்தார். காமநோயை வெளிவிடாது அகத்துள் அமைத்தார். ஆயினும் தமது உள்ளத்தைப் பறிகொடுத்து அதனைக் காணாது வருந்தி மயங்கினார். இவ்வாறு தலைமகளின் காதற்பாங்கினை, உள்ளத்துணர்ச்சியை இனிமை மீதூரக் கூறுகின்றார் கவிஞர். (5 × 5 = 25 புள்ளிகள்)

## பகுதி II

3. கீழ்க்காணும் பாடற்பகுதியை **அல்லது** உரைப்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

செந்தமிழ் மக்களே வாரீர் - எங்கள்
தெய்வத் தமிழ்மொழிச் சீரினைத் தேரீர்
அந்தமி லெம்மொழி மாதா - படும்
அல்லலைத் தீர்க்க அறிவுவ ராதா - செந்

முச்சங்கத் தரியணை யேறி - மன்னர்
முடிதொட்ட மூவரும் அடிதொட்டுப் போற்ற
விச்சையா லரசாண்ட மாதா - அவள்
வேதனை தீர்க்க விரக்கம்வ ராதா - செந்

இன்னமு தோதெளி தேனோ - என
எஞ்செவிக் கினிக்கின்ற மொழியெது தானோ
அன்னை மொழிதனை நாமோ - வெறுத்
தருவருத் தவமதித் திடலழ காமோ - செந்

சிந்தையிற் றேனமு தூறி - நாவில்
தித்தித்துத் தித்தித்துச் செவிவழி யேறி
வந்து கனிந்திருள் கீறி - எம்மை
வாழ்விக்கும் மொழியினை மறப்பதோ மீறி - செந்

[பக். 3 ஐப் பார்க்க

வேற்று மொழிகளைக் கற்றோம் - எங்கள்
மெய்யான முதுசொத்தை விலைபேசி விற்றோம்
ஆற்றிலே புளிகரைத் திட்டோம் - ஐயோ
அருமந்த தமிழினை யறியாது கெட்டோம் - செந்

(i) இப்பாடல் மூலம் புலவர் வலியுறுத்தும் விடயம் யாது ?
(ii) புலவர் யாரை முன்னிலைப்படுத்தி விடயங்களை எடுத்துரைக்கிறார் ?
(iii) முடிதொட்ட மூவர் என்று இங்கு சுட்டப்பெறுபவர்கள் யாவர் ?
(iv) 'ஆற்றிலே புளிகரைத் திட்டோம்' என்ற தொடர் மூலம் உணர்த்தப்படுவது யாது ?
(v) இப்பாடலில் தமிழ் மொழியின் இனிமையை உணர்த்துவனவாய் அமையும் தொடர்கள் எவை ?

**அல்லது**

அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்த குடிசைகளிலிருந்து ஒருவர் மற்றொருவரைக் கூவியழைக்கும் சத்தம் கேட்டது. கடைசியாய் அப்பாவும் எழுந்து, "தம்பி டேய்" என்று என்னை எழுப்பினார். நான் சுட்ட பிணம் போல வளைந்து நெளிந்து உட்கார்ந்து கொண்டேன். இரா முழுவதும் தூக்கம் இல்லாததினால் கண்ணிமைகள் கல்லாய்க் கனத்து அழுத்தின. ஆனாலும் உற்சாகத்தோடு எழுந்திருந்தேன். அப்பா சோற்றுப் பானை நிறையத் தண்ணீரை ஊற்றி எடுத்துக்கொண்டு நங்கூரம், தூண்டில், கயிறு சகிதம் வெளிக் கிளம்பினார். நானும் சவளைத் தோளில் வைத்துக்கொண்டு புறப்பட்டேன்.

படலையைத் திறந்து வெளியே வந்ததும் முகத்தில் வாடைக் கடுவல் ஊசி குத்துவதைப் போலச் சுளீர் சுளீர் என்று அடித்தது. எனக்கு உடம்பெல்லாம் நடுக்கமெடுத்தது. மேல் துண்டை முகத்தை வளைத்துக் கட்டிக் கொண்டு முன்னால் விறுவிறு என்று நடந்தேன். தூரத்தே குடிசைக்குள் இருந்த அகல் விளக்குகள் இருளைக் குத்துகுத்தென்று குத்தின.

ஓடைக் கரையை அடைந்தபோது, ஆறு, பரமார்த்த குருவின் சீடர்கள் கண்ட ஆற்றைப் போலத் தூங்கிக் கொண்டிருந்தது, கண்டல் இலைகள் பொட்டுப் பொட்டு என்று விழுந்து ஆற்றில் எங்கே போகிறோம் என்ற பிரக்ஞையே அற்ற வண்ணம் போய்க் கொண்டிருந்தன. கோரைப் புற்களின் மேலே சிலந்தி வலைபோலப் பனிப்படலம் மொய்த்துக் கிடந்தது.

(i) இந்த உரைப்பகுதியில் இடம்பெறும் 'அப்பா'வின் தொழில் யாது ?
(ii) அத்தொழிலோடு தொடர்புபட்ட உபகரணங்கள் எவையெவை இங்கு குறிப்பிடப்பட்டுள்ளன ?
(iii) 'ஆறு பரமார்த்த குருவின் சீடர்கள் கண்ட ஆற்றைப் போலத் தூங்கிக் கொண்டிருந்தது.'
- இத்தொடரில் இடம்பெற்றுள்ள அணி யாது ? அதன் மூலம் உணர்த்தப்படும் விடயம் யாது ?
(iv) குளிரின் கடுமை எவ்வெவ் வகையில் விவரிக்கப்படுகிறது ?
(v) இன்னும் பொழுது விடிந்து இருள் விலகவில்லை என்பது எதன் மூலம் புலனாகின்றது ?

(5 × 5 = 25 புள்ளிகள்)

## பகுதி III

- எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கு விடை எழுதுக.

**4.** **காளத்தி வேடனும் கங்கை வேடனும்** கட்டுரையில்,
(i) கண்ணப்பர்
(ii) குகன்
ஆகியோர் முறையே இறைவனிடமும் இராமனிடமும் காட்டிய அன்பின் சிறப்பு உணர்த்தப்படுமாற்றினை விளக்குக.

**5.** கம்பராமாயணம் - **கையடைப் படலம்** பாடல்களில்,
(i) தசரதனது பெருமை
(ii) அவன் முனிவர்களிடம் காட்டும் பணிவு
(iii) இராமனிடம் கொண்ட பாசம்
என்பன புலப்படுமாற்றினை விவரிக்குக.

**6.** **வேட்கை** சிறுகதையில்,
(i) ராங்கையாக் கிழவன் பாத்திரம்
(ii) கதைக்களம்
என்பவற்றை ஆசிரியர் விவரிக்கும் திறத்தை விளக்குக.

**7.** **புல்** கவிதையில்,
புல் தன் சரிதத்தை வெளிப்படுத்தும் பாங்கில் நீர் காணும் நயங்களை விளக்குக.

(15 × 2 = 30 புள்ளிகள்)

* * *